நற்குணங்களும் வாய்க்கப்பெறுதலுமேம்யாகும் என்று நன்றாக அறிந்தவராதலின், அதற்குத்தக்கபடி தம் புத்திரிக்குப் பயிற்றுவிப்பார் ஆயினர்.

இளவரசிக்கு உபாத்தியாயர் இருவர். அவர்களில் தலைமை உபாத்தியார் பிற்காலத்தில் பீடர்புரி அத்யக்ஷர் என்று உயர்ந்த பதவியைப் பெற்று மேன்மையடைந்த டேவிஸ் மஹா பண்டிதர். அவருக்கு உதவியாக இளவரசியின் படிப்பு விஷயங்களைக் கவனிக்கும்படி நியமிக்கப்பட்டிருந்தவர் லெஷன் பெருமாட்டி என்பவர்.

இப்பெருமாட்டியினிடத்தில் இளவரசி மிக்க பக்தியும் விசுவாசமும் உடையவராய், தாம் பட்டத்துக்கு வந்தபின் இவரைத் தமக்கு அந்தரங்க காரியதரிசியாகச் சிலகாலம் நியமித்து வைத்துக்கொண்டனர். இவர் பின்பு உத்யோகத்தைவிட்டுத் தமது சுதேசத்துக்குப் போய்விட்டபிறகும் அரசி இவரை மறவாதவராய், வாரம் ஒருமுறை தப்பாமல் இவருக்குக் கடிதம் எழுதிவந்தார்.

இளவரசி தமது சுயபாஷையாகிய இங்கிலீஷைப்போலவே, ஜர்மன், பிரஞ்சு, இதாலியன் என்னும் தேசாந்தர பாஷைகளையும் பால்யத்திலேயே சரளமாகப் பேசவல்லவர் ஆயினர். ஜர்மன் பாஷை தம் தாயாருக்கு ஸ்வபாஷையாதலினால் தாமும் அதை ஸ்வபாஷைபோலவே சுலபமாகக் கற்றுக்கொண்டனர். இவையன்றி தமிழ்ப் பாஷைக்கு ஸம்ஸ்கிருதம் எப்படியோ அப்படியே, இங்கிலீஷ் பாஷைக்குப் பலவகையாலும் மூலபாஷையாய் அதற்கு அழகையும் புஷ்டியையும் கொடுப்பதான லாடின், கிரீக் என்னும் பிராசீன பாஷைகளிலும் மிக்க தேர்ச்சியடைந்தார். அரசி, எப்போதும், பாஷைகளை அப்யசிப்பதில் மிக்க ஆசையும் சந்துஷ்டியுமுள்ளவர். வெகுநாட் கழித்துத் தமது *முதுமைப்பருவத்திலும் கூடத் தம்முடைய இந்திய பிரஜைகளும் மற்றவர்களும் கேட்டு மனங்களிக்கும்படி, ஹிந்துஸ்தானி பாஷையை விரும்பிக்கற்கத் தொடங்கினாரல்லவோ; இவையல்லாமல் கணிதம், சரித்திரம், தேச சட்டம், சங்கீதம், சிற்பம் முதலான வித்தைகளிலும் தேர்ச்சியடைந்தார்கள்.

இளவரசி சித்திரம் எழுதுவதிலும் சங்கீத வித்தையிலும் இயல்பாகவே மிக்க விருப்பமுடையவராய் அதி பால்யத்திலேயே மிக்க தேர்ச்சியடைந்தனர். இனிமையான சாரீர சம்பத்தையும் உடையவராதலின், எடுத்த கீர்த்தனங்களைக் கேட்போர்க்கானந்தமுண்டாக நன்றாகப் பாடவல்லவர் ஆனர். அரசியின் சங்கீத ஞானத்தை விவரிக்க ஓர் சிறு கதையுண்டு. பிற்காலத்தில், தாம் தமது அருமைக் கணவருடன் பக்கிங்ஹாம் அரண்மனையில் இல்லறம் நடத்திவரும் காலத்தில், சங்கீத சாகித்ய வித்தைகளில் அதிநிபுணராகிய மெண்டலோசன் என்னும் ஒரு ஜர்மானிய பண்டிதர் அரசியைத் தரிசிக்கவந்தனர். அப்போது பண்டிதர் தாம் இயற்றிய சில கீர்த்தனைகளைப் பாடி முடித்ததும், அரசி தாமும் ஒரு கீர்த்தனையைப் பாடுவதாகச் சொல்லி அவரது புஸ்தகத்தைவாங்கி, கடினமான ஒரு கிருதியை எடுத்து ஸ்வரங்களில் சற்றும் தவறுவாராமல், புலவர்தாமும் மெச்சி மனமகிழும்படி, இனிமையாகப்பாடி முடித்தனர்.

இளவரசி, தமக்கு நற்குண நல்லொழுக்கங்களைப் போதிக்கும்பொருட்டுத் தமது தாயார் எடுத்துக்கொண்ட விசேஷ சிரமத்துக்குத் தக்கபடி, பெரும்பயனை அடைந்தார்களென்பது அவருடன் பிற்காலத்தில் அடுத்துப்பழகிய ஒவ்வொருவருக்கும் நன்றாகத் தெரியும். பிற்காலத்தில், அரசியினிடத்தில் விசேஷமாக விளங்கின ஒவ்வொரு சிலாக்கியமான குணமும் "விளையும் பயிர் முளையிலே" என்றதுபோல அவரது குழந்தைப் பருவத்திலேயே அவரிடத்தில் நிலையாகக் குடிகொண்ட உண்மை, நீதி, அன்பு, இரக்கம் முதலிய நற்குணங்களை விளக்கும் விர்த்தாந்தங்கள் அநே

* மஹாராணியார் ஹிந்துஸ்தானி பாஷை கற்கத் தொடங்கினபொழுது அவருக்கு வயது 60.

கம் உள்ளன. அவை அரசியின் குணங்களைத் தெரிவிப்பதேயல்லாமல் படிப்போர்களுக்கும் மிக்க பிரயோசனமாகுமாதலின் அவற்றில் சிலவற்றை இங்கு விவரிப்போம்.

முதல் முதல், "பொய்யாமையன்ன புகழில்லை யெய்யாமை எல்லாவறமுந்தரும்" என்றபடி வாய்மையே சமஸ்தமான பெருமைக்கும் நன்மைக்கும் காரணமாகி, இம்மையில் அழியாப்புகழையும் மறுமையில் அளவில்லாத சுகத்தையும் கொடுக்குமாதலின், மக்கட் பிறப்பை யடைந்தவர் யாவர்க்கும் அது முக்கியமாயினும், மக்களுட் சிறந்து மநுநெறி செலுத்தி மன்பதையோம்பும் மன்னர்க்கு அது இன்றியமையாததாதலினால், இளவரசி பால்யம் முதலாக மனமொழி மெய்களால் பொய்மையைத் தவிர்த்து மெய்மையையே ஆசரிக்கும்படிப் போதிக்கப்பெற்று, அதைத் தமது பால்ய முதலாகத் தமக்கு உறுதிப் பொருளாகக் கொண்டனர்.

ஒரு நாள் பாடம் படிக்கையில், உபாத்தியாயரிடத்தில் சரிவர நடந்துகொள்ளாமல், விளையாட்டின்மேல் திருஷ்டியாய்ப் பாடத்தைச் சீக்கிரம் முடித்துவிடும்படி உபாத்தியாயரை அவசரப்படுத்தினர். பின்பு தாயார் வந்து லேஷன் பெருமாட்டியை நோக்கி, "இன்று இளவரசி எப்படி நடந்தாள்?" என்ன அவர், "ஒருதரம் மாத்திரம் சொன்னபடி கேளாமல் விஷமம் பண்ணினர்" என்றனர். அப்போது இளவரசி தாம் சொல்லும் உண்மையால் தமது குற்றம் பலப்பட்டுத் தாயாரின் கோபத்துக்குத் தாம் அதிகமாகப் பாத்திரம் ஆகவேண்டி வருமாயினும் அதனைப் பொருள் பண்ணாமல் உபாத்தினியை மெல்லத்தட்டி "மறந்துவிட்டீரே, இரண்டுதரமல்லவா?" என்று ஞாபகம் செய்தனர். இதனைக் கருதும்போது "நோய்மை செய்யினும் வாய்மையே நோன்பெமக்கறிதி" என்ற சத்திய விரதரின் தர்மம் எவ்வளவு இனிமையாக இளவரசியினிடத்தில் அதிபால்யத்திலேயே விளங்கிநின்றதாகத் தெரிகின்றது.

இந்நேர்மைக் குணமானது ஒருவர்க்கு இதர விஷயங்களைக்காட்டிலும் பணவிஷயங்களில் முக்கியமாய் இருக்கவேண்டியதாதலின், இளவரசி பால்யமுதலாகப் பணவிஷயத்தில் பிசகாத நேர்மையும் நாணயமும் உடையவராகக் கற்பிக்கப்பட்டு வந்தனர். அவர் ஒருநாளும் தம்மால் நிர்வகிக்கமுடியாத செலவைச் செய்வதும் இல்லை; தம்மால் அடைக்க முடியாத கடனையும் ஒருநாளும் வாங்குவதில்லை. சாதாரணமாக அரசர்களுக்குள் இந்த சுபாவம் இருப்பது மிக்க அருமை. தங்களுக்குவேண்டியபடி எவ்வளவோ வரும்படியிருந்தாலும், அவ்வளவும் போதாமல் அபரிமிதமாகக் கடன் வாங்கி வீண்செலவு செய்தல் அவர்களுக்குள் வழக்கம். அரசியோ பணவிஷயத்தில் மிக்க கண்டிப்பாக நிஷ்கர்ஷையுள்ளவர். இதைத் தெரிவிக்க அநேக திர்ஷ்டாந்தங்கள் உண்டு. அவற்றுள் ஒன்றை இங்கு குறிப்பிடுவோம். தாம் குழந்தையாயிருந்தகாலத்தில் ஒரு நாள் ஒரு கடையில் தமக்குப் பிரியமான விளையாட்டுக் கருவியொன்றைக்கண்டு அதை வாங்கவேண்டுமென்று ஆசைகொண்டனர். ஆனால் அதற்குப் போதுமான பணம் அப்போது கைவசம் இல்லாமையினால், சற்றே தயங்கிநிற்க, அதுகண்டு, கடைக்காரன் "பணம் அப்புறம் கொடுக்கலாமே, இதைக்கொண்டுபோங்கள்" என்று அதை எடுத்துக் கொடுக்கவும், இளவரசி அதற்குடன்படாமல், அப்பொருளை அவனிடத்திலேயே விக்ரயம் செய்யாமல் வைத்து வைக்கும்படித் திட்டம் செய்துவிட்டு, மறுநாள் வந்து பணத்தைக்கொடுத்து அதை வாங்கிக்கொண்டுபோனர். இக்குணமானது அரசிக்கு பால்யத்திலேயே உண்டாகி, வர வர உறுதியடைந்து, முடிவுவரையில் மாறுமலில்லை நின்று தவியது.

இவ்வாறு, பணவிஷயத்தில் மிக்க கவனமும் நாணயமும் உடையவராயிருத்தல் பெரிதோ? இதை இவ்வளவு சிறப்பித்துச் சொல்லவும்வேண்டுமோ? என்று சிலர் எண்ணக் கூடும். அங்ஙனம் எண்ணுதல் சரியன்று. உல

கத்தில் தமக்கும் பிறருக்கும் உண்டாகும் சுக துக்கங்களுக்கு முக்கியமான காரணம் பணமே. பணத்தைப் பராமரியாமல் வரவுக்கு மிஞ்சின செலவுகள்செய்து கடன்படுதலினும் துன்பம் வேறில்லை; கடன் படாமையினும் சுகமும் வேறில்லை. இதனாலன்றோ "கடனுண்டு வாழாமை முன்னினிதே" என்றும், "மேலே கடனிருப்ப வேண்டுமோ ஊணுறக்கம், பாலேயும் கைப்பாகும் பார்" என்றும்,

"விடன்கொண்ட மீனைப்போலும் வெந்தழன் மெழுகுபோலும்
படங்கொண்ட பாந்தள்வாயிற் பற்றிய தேரைபோலும்
திடங்கொண்ட ராமபாணம் செருக்களத் துற்றபோது
கடன்கொண்டார் நெஞ்சம்போலும் கலங்கினனிலங்கைவேந்தன்."—

என்றும் இவ்விஷயத்தை வற்புறுத்திப் பலவாறு கூறியிருக்கின்றனர். அரசர்கள் கடன்படுவாராயின், அதனால் அவர்களுக்கேயன்றி குடிகளுக்கும் உண்டாகும் துன்பம் இவ்வளவவ்வளவென்றில்லை. இவ்வுண்மையறியாமல் நமது தேசத்தில் எத்தனைபேர் சிற்றரசர்களும், ஜமீன்தார்களும், அபரிமிதமான துர்விரயம் செய்து பெருங்கடன்பட்டு, அரசும், ஆஸ்தியும், சீரும், சிறப்பும் இழந்து சிறுமைப்பட்டுப் போனவர்கள்? அரசியோ, அவனிடம் கடன்வாங்கினர், இவனைக் கடன்கேட்டார், அந்த வர்த்தகன் கொடுத்து முழுகிப்போனன். இவன் மோசம்போனன் என்று அங்கங்கு வம்பர்கள் குசுகுசுவென்று சொல்லிக்கொள்ளச் சிறிதும் இடம்வைக்காமல், தமக்குரிய வரும்படியைக்கொண்டே சமஸ்தமான செலவுகளையும் செய்துகொள்வதனல்; மனேசஞ்சலமும் அவஸ்தையும் அடையாமல் சுகமாயிருப்பதன்றியும், பலகாரணங்களிலும் முக்கியமாக இவ்வொரு காரணத்தாலும் குடிகள் தம்மை மிகவும் நேசித்துச் சிலாகித்துக்கொள்ளவும் பெற்றிருந்தனர்.

இச்சம்பந்தத்தில், அரசியின் வரவு செலவுகளைப்பற்றி சிலருக்கு அறிய விருப்பமுண்டாகுமாதலின், அவற்றை இங்கு சிறிது விவரிப்போம். அரசிக்கு பார்லிமெண்டாரின் தீர்மானப்படி, அரசிப்பட்டத்துக்கு வந்தகாலம் முதல், பிரதிவருஷமும் மூன்று லக்ஷத்தெண்பத்தையாயிரம் பவுன் கொடுத்துவரப்படுகின்றது. இதைத்தவிர வேறே வரும்படி அரசிக்கில்லை. இந்த வரும்படியைக்கொண்டு தானே அரசி தமது சொந்தச் செலவுகளும், தம்பரிசனங்களின் சம்பளங்களும், தமது குடித்தனச் செலவுகளும், தம் பெண்பிள்ளைகளின் படிப்புச் செலவுகளும் சமஸ்தமும் செய்துகொள்ளவேண்டும். அங்ஙனமாயினும், அரசிக்கு வரவர சம்சாரமும் செலவுகளும் அதிகரித்துக்கொண்டுவந்தும், அன்றுமுதல் இன்றுவரையில் ஒரு அறுபது வருஷகாலமாகத் தமக்கு நிர்ணயிக்கப்பட்ட வரும்படி போதாதென்றும், கூடவேண்டுமென்றும் குடிகளைக் கேட்டவரல்லர். இவ்வொரு விஷயத்தினலேயே அரசியின் செட்டும் கட்டும் நிதானமும், விதரணமும், ஒருவாறு ஊகித்தறியலாகும்.

அரசியின் மிதவிரயத்தைப் பற்றியும், அதில் அவர்க்குள்ள விருப்பத்தைப்பற்றியும், சில சங்கதிகள் இங்கு விவரிக்கலாகும். ஐரோப்பா கண்டத்தில் உள்ள அநேக அரசர்களுக்கும் பிரபுக்களுக்கும் உடுப்புகள்செய்து கொடுப்பவனுகிய பாரிஸ் வர்த்தகனொருவன், சிலநாளைக்குமுன், நியாயசபையில் ஒரு வழக்கில் இவ்விஷயமாகப் பிரஸ்தாபிக்கவேண்டி வந்தகாலத்தில், ஐரோப்பிய அரசர்களுக்குள்ளே தன்னிடத்தில் உடுப்பு செய்வித்துக்கொள்ளாதவர் இங்கிலாந்து மஹாராணி ஒருவர்தாம் என்று சொன்னனம். இதனல் இராணியவர்கள் வீணுகப் புச்சமும், குச்சமுமான இடம்பமான உடைகளில் பணத்தைக் கொட்டுவதில்லையென்பது நன்றாக விளங்கும்.

இளவரசி, பல சமயங்களிலும் தாமே நேரிட்டுக் கடை கண்ணிகளுக்குப்போவது வழக்கம். ஒருநாள், தாம் ஒரு நகைக்கடைக்காரன் கடைக்குப்போயிருந்த காலத்தில், அங்கு இளம்பிராயமுள்ள துரைமகள் ஒருவள் தங்கக்கொலுசொன்று வாங்கவேண்டி வெகுநேரம் பலதினுசுகளைப் பரிசோதித்துப் பார்த்தும் திருப்திப்படாமல், கடைசியில் ஒரு கொலுசை ஆராய்ந்து எடுத்துக்கொண்டு விலையை விசாரித்ததில், அது அதிக விலைபெற்றதாயிருந்தது கண்டு, கொஞ்சம் முகம்வாடி "அம்மா! இவ்வளவு விலைகொடுத்து எனக்கு வாங்க நிர்வாகமில்லை" என்றுசொல்லி அதைத் திரும்பக்கொடுத்துவிட்டு இன்னொன்று இலகு விலைக்கு வாங்கிக்கொண்டுபோனாள். அதைப் பார்த்துக்கொண்டிருந்த இளவரசி, அவள் போனபின், கடைக்காரனை நோக்கி "இவள் பெயர் உனக்குத்தெரியுமா?" என்று கேட்க அவன்தெரியும் என்றதும் "அவள் விரும்பின கொலுசை அவளுக்கு அனுப்பி தனக்கு வாங்கச் சக்தியில்லாததொன்றை வாங்காமல் தன் விருப்பத்தை அடக்கிய அவள் குணத்துக்கு மெச்சி விக்டோரியா இளவரசி அதை அவளுக்குப் பரிசாகக்கொடுத்தனுப்பினர் என்று தெரிவிப்பாய்" என்று உத்தரவு செய்தார்.

இதற்கு நெடுநாளைக்குப்பின், அரசியின் உருவம் எடுக்கப்பட்ட ஒரு காலத்தில், அவர் யாதோர் நகைகளும் பூட்டிக்கொள்ளாமல் ஒரு கறுப்புப்பட்டு மாத்திரம் உடுத்து உருவம் எடுக்கத் தயாராயினர். அப்போது, அருகில் இருந்தவர்கள் "ஏதாவது சில நகைகள் பூட்டிக்கொண்டால் அலங்காரமாயிருக்குமே" யென்ன, அரசி "வேண்டாம்; இவ்வுருவம் என் பிரஜைகள் பலரும் பார்க்கக்கூடியதாதலினாலும், என்னால் ஆனவரையில் அவர்களுக்குள்ளே வீண்செலவு செய்வதைத் தவிர்க்க வேண்டுமென்பது என்னிச்சையாதலாலும், இப்படியேதான் இருத்தல்வேண்டும்." என்றனர்.

## KAMALABAI.

SHORT STORY.

## கமலாபாய்.

(ஒரு சிறுகதை.)

"பொருளல்லவரைப் பொருளாகச்செய்யும்
பொருளல்லதில்லை பொருள்."—திருக்குறள்.

அது ஓர் ஏழைக்குடும்பம். அதில் தரித்திரம் அதிகரிக்கத் தகுந்தவளவு பிரஜாவுற்பத்தி அதிகப்பட்டு கோமான வருத்தத்தையும் சங்கடத்தையு முண்டாக்குவது சகஜந்தானே. அதற்கு குசேல சரித்திரத்தைவிட வேறு திருஷ்டாந்தமும் வேண்டுமோ? அனேகமாய் பெண்களுக்கு பிறந்தவீட்டில் விசேஷ சொம்பும் தெம்பும் நிறைந்திருந்தபோதிலும், புகுந்தவீட்டில் அஃதில்லாவிட்டால் சிறப்பும் சீரும் விசேஷமாயிராதென்பது திண்ணமன்றோ? நமது கதாநாயகி கமலாபாய் பிறந்த விடமாகிய முன்னூற்றுமங்கலத்திலுள்ள அநேக தென்னை, மா, கமுகு முதலிய தோப்புக்களுக்கும், நஞ்சை புஞ்சை பூமிகளுக்கும் சொந்தக்காரர் நமது கமலாபாயின் தந்தை ஹரிராயர். இவர் வடதேசத்திலிருந்து வந்த கர்நாடகப் பிராம்மணரெனப் புலப்படுகிறது. இவர்காதைத்திலரசாண்ட இராஜ சிரேஷ்டர்களுக்கு தன் வேலைத்திறமையினால் திருப்தியையுண்டுபண்ணி அநேக பூமிகளை சர்வமானியமாகப் பெற்றவர். அவ்வூரில் 365-அந்தணர்களுடைய கிரகங்களுண்டென்றும், இவர்கள் ஹக்கிரபூமி என்னப்பட்டவிடத்தில் தங்களை நாடிவந்த சிவமூர்த்தி என்ற புராணவிப்பிரசிரேஷ்டருடைய வாக்கினால் கேட்ட சத்சரிதைகளுக்கு பிரதிபலன் கொடாமல் தூஷித்துத் துரத்திவிடவே, அவர் தேசாதிபதியிடம் அவர்கள் வஞ்சனையையும், அக்கிரமத்தையும் முறையிட, இராஜனும் அவர்களை கடுமையாய்த்தண்டித்ததாகவும், பிறகு ஜகதீசன் கட்டளைப்படி இவர்கள் சகர சக்கரவர்த்திக்கு அறுபதினாயிரம் பிள்ளைகளாய் க்ஷத்திரிய வம்சத்தில் பிறந்து, கபிலர் சாபத்தால் சாம்பலாய், பகீரதனுடைய முயற்சியால் இப்பூமி

யில் வந்த கங்காநதியினல் விமோசனமடைந்து, முன்னூற்று மங்கலத்தில் பிராமணகுலத்தி லுதிக்கவும், புராணிகர் அடுத்த மலையில் பகாசூரனக உற்பவிக்கவும், முன்வினையினல் அவர்கள் தினப்படி அவ்வசுரனுக்கு சில வண்டிகள் நிறைய அன்னமும், அதற்குத்தக்க காய்கறிகளும், தயிர், நெய், பலகாரங்களும், ஒருமனிதனும் ஆகாரமாக அனுப்பிக்கொண்டுவர ஏற்பட்டதாகவும், பிறகு அவ்வசுரன் பீமனல் சம்ஹாரம் செய்யப்பட்டதாகவும், இராமாயண காலக்ஷேபத்தின் பலனுய் அவன் பின்பு பரீக்ஷித்து மகாராஜனுய்ப் பிறந்ததாகவும், சிற்சில கிரந்தங்களால் தெரியவருகிறது. நமது ஹரிராயர் இராஜாங்கத்தாரால் வடதேசத்திலிருந்து வரவழைக்கப்பட்டவராதலால் பகாசூரனுக்கு விருந்தளிக்க ஏற்பட்டவர்களில் உட்படவில்லை. இந்நகரையடுத்து பவானி நதி எக்காலத்திலும் வற்ருமல் ஓடிக்கொண்டிருந்தபடியால், விசேஷ நிலவளம் நீர்வளம் பொருந்தி கண்ணுக்கெட்டியதூரம் தெங்கு, மா, கொய்யா முதலிய பழ மரங்களாலும் பயிர் பச்சைகளாலும் நிறைந்து, வனமிருகங்களும் பக்ஷிஜாதிகளும் மலிந்து, ரமணீயமாயிருந்ததாகத் தெரியவருகிறது. யானைத் தந்தங்களும் மான்கொம்புகளும் காடுகளில் எரிகரும்புக்காகச் செல்கிறவர்களுக்கு சர்வசாதாரணமாய் அகப்படுகிறதுண்டென்றும், சில தந்தங்கள் எடுப்பாரின்றி மண்ணுக்கிரையாமென்றும் கூறப்படுகிறது. இந்நகருக்கு சந்திரசேகரபுரம் என ஒரு நாமமுமுண்டு. இராயர் காலத்திற்குப்பிறகு அவர் குமாரன் நாகோஜிராவ் தந்தையின் சகல சொத்துக்களுக்கும் பாத்தியஸ்தனுய், தான் இலக்ஷ்மிபுத்திரன் என்பதை வெளிஜனங்களுக்குக் காட்ட, தனக்கும் தன் குழந்தைகளுக்கும் சமுசாரத்திற்கும், உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரையில் பொன்னுபரணங்களையும் கல்நகைகளையும் செய்து பூண்டு, பட்டாடைகளையும் ஜரிகைவஸ்திரங்களையுமன்றி மற்றத் துணிகளையணியாமல், அலங்கரித்துக்கொண்டு வெகு கம்பீரமாய் யாரையும் லக்ஷியஞ்செய்யாமல் ஈவிரக்கமின்றி, தன் தந்தையை யடுத்துப் பிழைத்து வாழ்ந்துவந்த சுற்றத்தாரையும் பந்துக்களையும் நீக்கினதுமன்றி, தன் ஒரே சகோதரியும், நமது கதாமணியுமாகிய கமலாபாயையும் புக்ககத்திற்குப் போகும்படி யனுப்பிவிட்டனர்.

கமலமோ பிறந்தநாள்முதல் விவாகமாகிற வரையிலும், விவாகமான பின்பும் புருஷனுடன் தாய் வீட்டிலேயே வாழ்ந்து யாதொரு கவலையும் கிலேசமுமின்றி இருபத்திரண்டு வயதிற்குள்ளேயே நான்கு குழந்தைகளைப் பெற்று மகோன்னத தசையிலிருந்தவளானபடியால் வறுமை என்பதையும், கஷ்டமென்பதையும் அறியாள். இவள் தகப்பன் ஜீவவந்தராயிருக்குங்காலத்தில், இவள் ஏதோ காரியார்த்தமாய் வெளியேபோனல், தந்தை உடனே இவளை ‘கமலா வெயிலில் போகாதே உன் முகம் வாடுவதை நான் சகியேன்’ என்று கூவியழைத்து பக்கத்திலுட்காரவைத்துக் கொண்டு இன்சொல் கூறுவார். பெயருக்குத் தக்க வழகும் குணமுமமைந்து கற்புக்கரசியாய் விளங்கினவளை பச்சாதாபமின்றி சகல ஆடையாபரணங்களையும் கவர்ந்துக்கொண்டு தமயன் துரத்திவிட்டபடியால், குழந்தைகளுடன் புருஷனையும் கூட்டிக்கொண்டு கால் நடையாகப் புக்ககம் சேர்ந்தனள்.

சங்கர்ஜி எனப் பெயர்வாய்ந்த புருஷனே மாமனர் வீட்டுச் சொத்தை நம்பி கணபதிபுரமென்ற ஊரிலுள்ள தன் வீடுவாசல் பூமி காணிமுதலியவைகளை அலக்ஷியஞ்செய்து, சிறுவயதிலேயே மாமனர் வீடுசேர்ந்து அகவிலையறியாதவரா யிருந்தபடியால், தன்னூர் சேர்ந்த பிறகு ஜீவனேபாயம் தெரியாமல், குடும்ப சம்ரக்ஷணர்த்தம் வெகு கவலைமேலிட்டு, பிதுரார்ஜிதமான சொத்துக்களை ஒவ்வொன்ருக விற்றுத்தின்றும் நாள்கழிந்தபாடில்லை. யாம் ஆதியில் சொன்னபடி மறுபடியும் இரண்டு குழந்தைகள் அதிகரித்தன. மூந்திய பெண்ணுக்கு விவாகமும், பிந்திய

பிள்ளைக்கு உபநயனமும் நடத்த, காலம் நெருங்கி மனத்தைவருத்திற்று. விசாலமான பழைய வீட்டில் விளக்குவைக்க எண்ணெய்க்கும் வழியில்லை. தரித்திரம் மேலிட்டபடியால் ஒருவேளைப் போஜனத்திற்கும் திண்டாட்டமாயிற்று. கடன் கொடுப்பாருமில்லை. வீட்டின்பேரில் கடன் கொடுத்திருந்த ஆசாமி கோர்ட்டில் வழக்கிட்டு வீட்டை ஜப்திசெய்ய, ஏலம் போடத் தேதிகுறிக்கப்பட்டது. சங்கர்ஜி எங்கேயோடித் தப்பிக்கலாமென்று யோஜிக்கிறார். குழந்தைகள் பசியால் வருந்துகின்றன. கமலமோ கண்ணும் கண்ணீருமாய் தவிக்கிறாள். இங்கே ஸ்திதி இங்ஙனமிருக்க,

தமயன் நாகோஜி வீட்டை கவனிக்கும் பொழுது அவன் திரவிய மகிமையால் கண் தெரியாமல், அறிந்து பழகினவர்கள் எதிர் வந்து நின்று பெயர் குறிப்பு சொன்னபோதிலும், தெரியாதவன்போல் பாசாங்கு செய்துக் கொண்டு தன்னுடைய கைவிரல்கள் நிறைந்து கல்லிழைத்த மோதிரங்களையும், பெண்சாதியணிந்துக்கொண்டிருக்கிற பொன்னாபரணங்களையும் அடிக்கடி பார்த்து ஆநந்தித்துக் கொண்டிருந்தான். அவன் பெண்சாதியோ மகா கொடியவள். ஒருநாள் அவன் தன் சமையலறையிலிருக்கையில் ஒரு ஸ்திரீ இயற்கையழகே மிகுந்து செயற்கையழகின்றி சில குழந்தைகளுடன் வந்தாள். அவர்களைப் பார்ப்பதற்கு வெகு தூரத்திலிருந்து நடந்து வந்தவர்கள்போல். நெற்றியில் நீர்வடிய, பசியால் களைப்படைந்து, கண்குழிந்து, நின்று பேசவும் சக்தியற்றவர்களாய்த் தோற்றினார்கள். சுமார் மணி பதினொன்றிருக்கலாம்.

‘நொய்தாந் திரணத்தி னொய்தாகும் வெண்பட்சி
னொய்தா மிரப்போ னுவலுங்கா—னொய்யசிறு
பஞ்சுதனி னொய்யானைப் பற்றாதே காற்றணுக
வஞ்சுமவன் கேட்ப தறிந்து.’

என்றபடி இவர்களுடைய அலங்கோலத்தைக்கண்ட காற்றும் பயப்படுவது நியாயமாகவிருக்க, அதற்கு விரோதமாக இரக்கமுற்று இளங்காற்று வீசியது. நெற்றியில் வடிகிற வியர்வை நீரைக் கையால் வழித்து எறிந்துக் கொண்டு நின்றவளைக்கண்ட நாகோஜியின் மனைவி “யார்?” என்றும், “என்ன சங்கதி?” என்றும் கேட்கவில்லை. இதனால் இன்னாரென்று தெரிந்துக்கொண்டே மமதையாலும், கர்வத்தாலும் லக்ஷியஞ்செய்யவில்லை என்பதை யறிந்தவள் நாணமுற்று, ‘பசியறியாது வெட்கமும் நாணமும்’ என்பதற்கிணங்க ‘நாகோஜி எங்கே’ என்று கேட்டாள்.

நாகோஜிமனைவி.—“அவர் எங்கே போனாரோ? யார் கண்டது? வேலை என்ன?” என்பதாகக் கடுகடுத்த வதனத்துடன் கூறி முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

வந்தவள்.—குழந்தைகள் நடந்துவந்த அலுப்பால் அழுகின்றன. கொஞ்சம் பழைய அன்னமிருந்தால் குட்டிகளுக்குப்போடேன்.

நாகோஜி மனைவி.—(கோபக்குறி தொனியுடன்) இங்கே யார் பழையது சாப்பிடுகிறார்கள்?

‘கொதிக்கிற கூழுக்கிருப்பீரானால்
இருப்புறை காணலாம்’ என்றனள்.

வந்தவள் முகம்வாடி துக்கம் தொண்டையிலடைக்க, பசி வயிற்றைப் பிடுங்கித்தின்ன, குழந்தைகள் இதுகொடு அதுதா வென்று அலட்ட, புறக்கடைப்புறம் திரும்பி கொல்லையை நோக்கித் தன் குழந்தைகளுடன் சென்றனள். அவ்விடத்தில் நாகோஜிராவ் சிற்சில பண்ணையாட்கள் செய்கிற வேலையை மேற்பார்வை பார்த்துக்கொண்டிருந்தவர், வந்தவர்களைக் கடைக்கண்ணால் பார்த்து சும்மா விருந்துவிட்டனர்.

வந்தவள்.—(சற்று பொறுத்திருந்து) நாகோஜி, குழந்தைகள் பசியால் தவிக்கிறது. சமையலோ இன்னுமாகவில்லை. தென்னமரத்திலிருந்து நான்கு இளநீராவது போடச் சொல்லி வெட்டிப் பொத்திக்கொடேன்.

நாகோஜி முணுமுணுத்துக்கொண்டு இரண்டு இளநீர் தள்ளச்சொல்லி வெட்டிக் கொடுப்பித்தான். அவை அதிக இளசான குரும்பையானபடியால், நீரும் கொஞ்சம்,

தேங்காய் வழுக்கல்கூட அதிகமாயில்லை. ஒரு குழந்தைக்காவது தொண்டை கூட நன்றாக நனையவில்லை. குழந்தைகள் எனக்கு உனக்கென்று செய்கிற ரகளையையும் ஒரு குழந்தை தேங்காய் மட்டையிலுள்ளதை தன் பல்லாற் சுரண்டித் தின்பதையும் கண்ட நாகோஜி 'தரித்திரப் பிணங்கள்' என்று சொல்லி வேறு வேலையாய்ப் போய்விட்டான்.

வந்தவள்.—

"நல்லார் இளந்தேங்காய் நன்றாய்க் காய்த்தாயே
பாவி இளந்தேங்காய் பாலாடைபோற் காய்த்தாயோ?"

என்று சொல்லிவிட்டுத் திரும்பினாள். குழந்தைகளைத் பொறுமையுடன் இன்சொற்களால் ஆதரவூட்டிக்கொண்டு மெல்ல மெல்ல நடந்து பகல் சுமார் ஒரு மணிக்கு காரைச்செடிகள் நிறைந்த ஒரு காட்டின் வழியே செல்கிற பாதையினோரத்திலுள்ள ஒரு குட்டையையும் கன்னிமார் கோவிலையும், அதன் பக்கத்திலுள்ள ஆலமரத்தடியில் வழிப்போக்கர்கள் தங்கி சமையல்செய்து எறிந்துவிட்டுப்போன பெரிய மண்பாத்திரங்களையும், மூக்கல்லாற் கூட்டப்பட்ட ஒரு அடுப்பில் தீபுகைந்துக் கொண்டிருப்பதையும் கண்டு, ஒரு பெரிய சட்டியை யெடுத்துக் கழுவி காரைச்செடிகளிலுள்ள இளந்தளிர்களைக் குழந்தைகளும் தானுமாகக்கொய்து, சட்டியிலிட்டு, அடுப்பேற்றி தகுந்த அளவு நீரையும் வார்த்து, தீக்கொளுத்தி வேவித்தனள். குழந்தைகளுக்கு கீரை சுண்டித் தருவதாய் வாக்களித்தும், ஆசைகாட்டியும், குட்டையில் விளையாட உத்தரவுகொடுத்தும், ஆயாசந்தீர்த்ததன்றி, இப்பேர்க்கொத்த அனுதரவான காலத்தில் கலங்காத மனோதிடமுள்ளவளாயிருந்தாள்.

இங்ஙனம் பிள்ளைகள் ஒருபுறம் விளையாட, தான் அடுப்பண்டையுட்கார்ந்து கீரையைக் கிண்டிக்கொடுத்து அதற்கிட உப்பில்லாததால் விசனமுற்று பரிபூரணரும் சர்வவியாபகருமான பகவானை, "ஆபத்பாந்தவா" என வாய்விட்டுக் கதறிக்கூவி அனுதியாகிய தான செய்யும் கீரையை தேவாமிருதமாகும்படியாகவும், தன் குழந்தைகளை அதனால் பசியாற்றும்படியாகவும், மன்றாடி வருந்தினாள், வாடினாள், நமஸ்கரித்தாள், கைகூப்பினாள், சிரமேற்றாக்கினாள் பலதரம்.

இரண்டு தடவை மூடியிருக்கும் சட்டியைத் திறந்து கீரையைப்பார்த்தாள். நீராவியால் கீரை கண்ணுக்குப் புலப்படவில்லை. கொம்பு கொண்டு எடுத்துப்பார்த்தாள். பொன்னிறமான ரசம் கசம்பியோடிற்று. சுகவாசனை கமகமவெனப் பரிமளித்தது. அவற்றை முகர்ந்த புள்ளினங்கள் கூவிப்பறந்து வட்டமிட்டன. பிள்ளைகள் பசியால் வருந்தும் கஷ்டத்தையும், தாயின் பரிதாபத்தையும் கண்டுகேட்ட கதிரவன் மனதிரங்கித் தன் கிரணங்களை யொடுக்கி சுவர்ணநிறமாய் மேற்குத் திக்கில் பரபரப்பா யோடிக்கொண்டிருந்தான். சட்டியை அடுப்பைவிட்டிறக்கி, சூடாறின பிறகு ஆத்திரத்தினால் எல்லோரும் வட்டமாக நின்று, கீழே கற்பாறைபின்பேரில் கவிழ்த்தார்கள். கலகலவென்ற சப்தத்துடன் குவிந்தது. . . . . .

* * * *

கண்டார்கள், கண்குளிர்ந்தார்கள். ஆநந்தித்தார்கள். பசி பஞ்சாய்ப்பறந்தது. குதூகலத்துடன் பேருக்குக்கொஞ்சமாக வாரிக் கட்டிக்கொண்டு,

"காரைச்செடி வாழ கன்னியம்மாள் குட்டைவாழ,
காரைநகர் வாழ—இன்னுஞ் சிலகாலம்
செல்லப்பிறந்தகமும் வாழ."

எனவாழ்த்தி, கடுகி வழிநடந்து முச்சந்தி வேளையில் விநாயகபுரம் சேர்ந்தார்கள்.

இவர்கள் தரித்திரத்தின் கொடுமையால் தமயன் வீடு சென்ற கமலாபாயும் குழந்தைகளும் என்பதையும், இவர்களுக்கு கடவுள் கிருபையால் அகப்பட்டது ஒருகோடி திரவியமென்பதும், இதைப் படிப்போருக்குத் தெரியாதிராதென நம்பி மேல் நடந்தவற்றை ஒருவாறு கூறுவாம். தமயன் வீடுசென்ற வரலாற்றையும், தனக்கு தமயன் இவ்வளவு திரவியமும் கொடுத்ததாகவும் புருஷனிடத்தில் சொல்லி, வேண்டிய பொன்னாபரணங்களையும் நகைநட்டுகளையும் தனக்கும் தன் குழந்தைகளுக்கும் செய்துக்கொண்டு கொஞ்சநாள் சென்றபிறகு தனக்குக் கடவுள் கிருபையாலுண்டாயிருக்கிற போகபாக்கியங்களைப்பற்றி தமய

னுக்குத் தெரிவித்து, சகலாபரணருடியாய், குழந்தைகளுக்கும் வேண்டிய ஆடை ஆபரணங்களை அணுவித்து, இரண்டு குதிரைகள் பூட்டிய வண்டியிலேறிக்கொண்டு தமயனைப் பார்க்கப் புறப்பட்டனள்.

தமயன் தன் பெண்சாதி பிள்ளைகளுடன் ஒருமைல் தூரம் எதிர் சென்றுவந்து, சகோதரியும் அவள் குழந்தைகளும் அணிந்துக் கொண்டிருக்கும் ஆபரணங்களையும் பட்டாடைகளையும் கண்டு ஆநந்தித்து, கட்டித்தழுவி முத்தமிட்டு, கைக்குழந்தையை தன் சம்சாரத்தினிடத்திற் கொடுத்து, எடுத்துக்கொள்ளச் செய்து, மூத்தகுமாரனை தன் கையில் பிடித்துக்கொண்டு வண்டியேறிச்சென்று வீடு சேர்ந்து, தீர்த்தமாடச்செய்து முந்தியே ஏற்பாடு செய்திருந்தபடி சித்தமாயிருந்த ஷட்ரச பதார்த்தங்களையும் பக்ஷண பலகாரங்களையும் தலைவாழை இலைகளில் பரிமாரி உட்கார்ந்து போஜனஞ் செய்யும்படியாக உபசரித்துப் பிரார்த்தித்தார்கள்.

* * * *

கமலாபாய் இந்த அமர்க்களத்தைக் கண்டு ஆநந்தித்து உடனே தான் முன் வந்தபொழுது நடந்தவைகளை நினைத்துத் துக்கித்து, இவ்வாடம்பரத்திற்கும் துக்கத்திற்கும் காரணம் தானும் தன் குழந்தைகளும் அணிந்துகொண்டிருக்கும் நகைகளும் பட்டாடைகளுமே எனத்துணிந்து, உடனே குழந்தைகளும் தானுமணிந்துக்கொண்டிருந்த நகைகளில் காரை, வங்கி, பவுன்மாலை, அட்டிகை, காப்பு முதலிய சிலவற்றை கையில் வாங்கி பல பக்ஷண பதார்த்த பழவர்க்கங்களால் பரமாரப்பட்ட இலைகளின்முன் வைத்து "ஓ! காரையே, லட்டு சாப்பிடு, ஆ! வங்கியே, பாயசங்குடி, ஏ! பவுன்மாலையே, பேணியை ருசிபார்! ஓ! அட்டிகையே, அதரசம் புசி!' என்று அடுக்கடுக்காகப் பலதரம் கூறி நகைகளை எடுத்து அணிந்துக்கொண்டு பிள்ளைகளுடன் சரேலென்று புறப்பட்டு வண்டியேறி கணபதிபுரம் சேர்ந்து சுகித்திருந்தனள்.

* * * *

நாகேர்ஜியும் அவன் மனைவியும் யாதொன்றும் தோன்றாமல் மரம்போல் நின்று திகைத்தார்கள்.

"நச்சப்படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சுமரம் பழுத்தற்று."—திருக்குறள்.

## LESSONS IN CIVICS.

### FACILITIES FOR EXCHANGE.

### பண்டமாற்றலுக்குவேண்டிய சாதனங்கள்.

1. Currency. 2. Banks 3. Weights and Measures.
கரன்ஸிகள். பாங்கிகள். அளவைகள்.

முன் காலத்தில் பணம் என்பது கிடையாது. ஆனல் நாகரீகம் என்பது ஏற்படுமுன் ஜனங்கள் அவரவர்களுக்குவேண்டிய சாமான்களைச் செய்துகொண்டும் ஒருவரிடமிருந்த பொருளை மற்றவர்களுக்கு கொடுத்து பண்டமாற்றிக்கொண்டும் வந்தார்கள். இதற்கு (Barter or Exchange without the Medium of Money) என்று பெயர். அவரவர்கள் பொருளை அவரவர்கள் உபயோகிக்கிறதற்கும் பணத்தை கொடுத்து பொருளை வாங்குகிறதற்கும் இடையாயுள்ளதற்கு (Medium of Exchange) என்று பெயர். ஒருவன் தன்னிடமுள்ள வஸ்துவை பிறருக்குக் கொடுத்து பிறன் வஸ்துவை மாற்றிக்கொள்வதாயின் இருவரிடமுள்ள வஸ்துக்களும் ஒரே விலையுள்ளதாக விருக்கவேண்டும். இல்லாவிடில் ஒருவர்க்கொருவர் மாற்றிக்கொள்ளச் சம்மதிக்கமாட்டார்கள். அப்படிக்கின்றி ஒரே வஸ்து ஒரு சமயத்தில் கிராக்கியாகவோ மலிவாகவோ ஆகக்கூடும். அப்படியானல் ஜனங்கள் சாமானைக்கொடுத்து மாற்றுவது சிரமசாத்தியமாயிருக்கும். ஆகையால் எந்த சாமானை நாம் உபயோகிக்கிறோமோ அதன்மதிப்பு ஒரே நிதானமாய் இருக்கவேண்டும் அடிக்கடி மாறக்கூடாது. இதற்கு (Standard Value) என்று பெயர்.

### QUALITIES NECESSARY FOR MONEY.

### நாணயங்களுக்கு வேண்டிய குணவிசேஷங்கள்.

1. அதற்கு மதிப்பும் உபயோகமுமிருக்க வேண்டும். (It should posses value & it must be useful)

2. சுலபமாய் ஓரிடமிருந்து மற்றோரிடம் கொண்டுபோகக்கூடியதா யிருக்கவேண்டும். (Easily portable).

3. சுளுவில் பிரித்தெடுக்கக்கூடியதா யிருக்கவேண்டும். (Divisible.)

4. சீக்கிரத்தில் அழியக்கூடாததாயிருக்க வேண்டும். (Indestructible).

5. அதன் மதிப்பு அடிக்கடி மாறக்கூடாது. (Value unchangeable).

மேற்சொன்ன குணங்களையெல்லாம் உடையது தங்கமும் வெள்ளியும்தான். இவைகளைத் தவிர்த்து இதர உலோகங்களும் நாணயங்களாக வழங்கி வருகின்றன.

MONEY USED IN OLDEN DAYS.

முற்கால நாணயங்கள்.

வேட்டையாடும் நிலைமையிலுள்ள ஜனங்கள் எலும்பையும் தோலையும் மேய்ச்சல் நிலைமையிலுள்ள ஜனங்கள் ஆடுமாடுகளையும் வியவசாய நிலைமையிலிருந்த ஜனங்கள் தானியப் பொதிகளையும் நாணயங்களாக வழங்கி வந்தார்கள். இன்னும் New Guinea போன்ற விடங்களில் அடிமைகளை, பணமாகவும் Sahara Desert போன்ற விடங்களில் உப்பை நாணயங்களாகவும் இன்னும் சிலவிடங்களில் (Couri Shells) சோழிகளை நாணயங்களாகவும் வழங்கி வந்ததாகத் தெரியவருகிறது. உலோகங்கள் அகப்பட்டு நாணயங்களாகச் செய்யுமுன் தங்கப் பொடிகளை பைகளில் கட்டி நாணயங்களாகவும் தங்கக்கட்டிகளையும், தங்கக்கம்பிகளையும் நாணயங்களாகவும் உபயோகப்படுத்திவந்தார்கள். இதனால் சில கெடுதல்கள் ஏற்பட்டன. இராஜாங்கத்தார் உத்திரவில்லாததனால் ஜனங்கள் ஒருவர்க்கொருவர் மோசம் செய்ய இடமுண்டு. நாணயத்துண்டுகளை உபயோகித்தால் ஜனங்கள் நல்ல உலோகங்களை வாங்கிக்கொண்டு கலப்பு உலோகங்களைக் கொடுத்து மோசம் செய்தார்கள். உலோகங்களில் வரம்பு முதலிய யாதொரு அடையாளமுமில்லாததால் குறைக்கவும் இடமிருந்தது. இம்மாதிரியான மோசங்களையெல்லாம் அறிந்த துரைத்தனத்தார் நாணயத்தின் ஒரு பக்கத்தில் இராஜா அல்லது இராணியின் தலையும் மற்றொரு பக்கத்தில் நாணயத்தின் மதிப்பும் சில பூ வேலைகளும் இருபக்கங்களிலும் வரம்புகளும் உள்ளதாய் (Milling) நாணயங்களடித்து வருகிறார்கள். இந்த அடையாளங்கள் நாணயங்களின் இடையை நிச்சயப்படுத்தவும் சூது மோசமில்லாமல் உலோகங்களை (Proportionate) அளவுடன் கலக்கவும் வெட்டிக் குறைத்தெடுக்க முடியாமலும் இருப்பதற்காகவே ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

CURRENCY.

கரன்ஸி.

| 1 Mettallic Currency. | 2. Paper Currency. |
|---|---|
| உலோக நாணயங்கள். | காகிதநாணயங்கள். |
| 1. Standard Coins. | 2. Token Coins. |

இந்த உலோக நாணயங்கள் இருவகைப்பட்டது.

STANDARD COINS.

Mettallic Value. Legal value.

ஒரு (Metal) நாணயத்தின் மதிப்பு அது உலோகமாக விருந்தாலும் பிறகு நாணயமாக மாற்றப்பட்டாலும் ஒரே மதிப்புள்ளதாகவிருக்கவேண்டும். ஒரு நாணயத்தின் விலை குறைந்தால் அல்லது அதிகமானால் பொருள்களின் விலைக்குத் தக்கபடி பணங்கொடுத்து சாமான்கள் வாங்க ஏற்பட்டிருக்கும். அப்படிக் கொடுத்து வாங்க உபயோகப்படுத்துவது தங்க நாணயங்களுக்கு மட்டும்தான். வெள்ளி முதலிய நாணயங்களுக்கு எப்பொழுதும் ஒரே மதிப்புத்தான். ஆகையால் தங்க நாணயங்களை Standard Coins என்று சொல்லப்படுகிறது.

TOKEN COINS.

நாணயக்குறி.

சாமானின் விலை எப்படியிருந்தபோதிலும் நாணயத்தின் மதிப்பு ஒரே மதிப்புதான். பவுனின் மதிப்பு 15-ரூபாயாயிருந்தபோதிலும் 15-முதல் 18-ரூபாய் வரையில் செலாவணியாகிறது. ரூபாய், அரை ரூபாய் முதலிய வெள்ளி நாணயங்கள் அப்படி செலாவணியாகிறதில்லை. ஆகையால்தான் இந்த வெள்ளி நாணயங்களுக்கு (Token Coins) நாணயக்குறி என்று பெயர். மேலும் ஒரு பவுனை உருக்கினால் 15-ரூ. மதிப்புள்ள உலோகம் தேறிவிடும். ரூபாயோ 9-அணா வெள்ளிதான்தேறக்கூடியது. இன்னும் இவைகளைத்தவிர்த்து செம்பு முதலிய உலோகங்களையும் நாணயங்களாக அடித்து வருகிறார்கள். நாம் கஜானாவில் பணத்தைக் கட்டினால் சிறு தொகைகளுக்கு அரை ரூபாய், கால் ரூபாகள்தான் எடுத்துக்கொள்ளுகிறதில் அவர்களுக்கு சிரமமில்லாமலிருக்கிறது. பெரிய தொகையாயிருந்தால்தான் ரூபாயையும் (Sovereins) பவுன்களையும் எடுத்துக் கொள்ளுகிறார்கள். ஆகையால் பவுன், ரூபாய், இவைகளுக்கு Legal Tender என்று பெயர்.

## THE CHILDREN'S PAGE.
## THE EVILS OF AMBITION.
## சிறுவர்க்கான பக்கம்.
## "பேராசை பெருங்கேடு."

பல நூற்றாண்டுகளுக்குமுன் மகேந்திர புரம் என்பது ஒரு சிறந்த நகராய் விளங்கிவந்தது. அந்நாளில் அந்நகரை பகவான்தாஸ் என்னும் பார்த்திபன் பரிபாலனம் பண்ணி வந்தான். அக்கால் அவ்வம்பதி மாளவ தேசத்திற்குக் கப்பங்கட்டிக்கொண்டு வந்து கொண்டிருந்தது. ஆகலால் பகவான்தாஸ் சிறைகட்டி வரும் சிற்றரசனாய் இருந்தான்.

அந்நாளில் அவ்வூரில் கேசவபட்டர் என்னும் பெயர்பூண்ட அந்தணனொருவன் வாழ்ந்துவந்தான். அவன் கலைமகள் கடாக்ஷம் குறைவறப்பெற்ற கண்ணியன், ஆயினும் திருமகள் கருணையற்றவனாய்த் தெருத் தெருவாயலைந்து, பிச்சைக்கப்பரையேந்தி உஞ்சிவர்த்தி செய்து உயிர் வாழ்ந்துவந்தான், லக்ஷ்மி கருணையற்ற பிக்ஷகனாயிருப்பினும் அவன் அத்தேவியின் திருவடித் தாமரைகளைக் கணமேனும் மறவாது தியானம் செய்துவந்தான். இவ்வாறு சின்னாட்செல்ல இலக்குமியும் அவன் மேலிரக்கம்கொண்டு அவன் இலக்ஷாதிகாரியாகும்படி கடாக்ஷித்தருளினாள். பார்ப்பான், ஒருநாள் வழக்கம்போல் வேறோரூரில் பிக்ஷை பெற்று வீட்டுக்குத் திரும்புங்கால், இருள் பரவும் நேரமாய்விட்டது. இனிச், சாலைவழியே செல்லுவது சாலவும் சல்லியமெனச் சிந்தித்து, குறுக்கே ஓர் சிறு காட்டின்கண் இறங்கி ஒரு ஒற்றைபடிப் பாதையாய் வந்து கொண்டிருந்தான். அப்போது, பக்கத்தில் சலசலவென்று ஒரு சத்தமுண்டாக, அந்தணன், குலை நடுக்கமுற்றுக் குப்புறவிழுந்தான். விழுந்ததும், இவன் பக்கலில் "கல் கல்" என வெண்கலம்போல் ஏதோ ஒரு சத்தமுண்டாயது. உடனே பயந்த பார்ப்பானுக்குப் பயித்தியமே பிடித்துவிட்டதுபோல் விரைந்தெழுந்து வேஷ்டியை வழிந்து கட்டிக்கொண்டு வேகமாய் ஓடவாரம்பித்தான். ஓடுபவன், உயிரிருந்தால் எப்படியேனு முணவுபெறலாம். உயிரே போகுங்கால் உணவுஎன்ன செய்யும் என்று ஆலோசனை செய்துகொண்டு பிக்ஷை மூட்டையை வீசியெறிந்தான். அம் மூட்டை தற்செயலாய் அவன் முன்விழுந்த இடத்திலேயேவிழ மறுபடியும் "கல் கல்" என்ற சத்தம் எழும்பியது. எழும்பியசத்தம் கேசவபட்டர் செவியை எட்டியதும், வெகு வேகமாய் ஓடி வீடடைந்தனன் அந்தணன். வீடடைந்ததும் பயமற்றவனாய்த் தான் கேட்ட சத்தத்தைப்பற்றிச் சிந்தித்தான். அதைப் பற்றி நினைக்க நினைக்க அவனுக்கு அச்சத்தம் ஒரு புதையல் குவியலினின்றும் கிளம்பியதாயிருக்கலாம் என்று எண்ணம் தோன்றியது. உடனே மறுநாள் விடிந்ததும் போய்ப் பார்த்துவிட்டு வந்துவிடுவோமென்று தீர்மானஞ் செய்துகொண்டான்.

மறுநாள் இருள் கழிந்ததும் வேதியனெழுந்து வேர்க்க விருவிருக்க, விருக்ஷம் நிறைந்த வக்காட்டிற்குக் கடப்பாறையும் கையுமாய்க் கடுகி நடந்தான். சிலதூரம் சென்றதும், தான் முந்திய சந்தியில் எறிந்து சென்ற மூட்டையைக் கண்டான். கண்டதும் அதனருகில் தோண்டலுற்றான். தோண்டியவன் மனமகிழ தோண்டியொன்று பெரிதாயகப்பட்டது. அதன்கண் விலைபெறு மாணிக்கங்களும், நிகரிலாக் கெம்புகளும், கண்பறிக்கும் வைரங்களும், மனங்கவரும் மஞ்சப்பொன் காசுகளும் நிறைந்திருக்கக்கண்டான். ஆனாலும் பெருநிதியடைந்த நிர்மலப் பார்ப்பானை யடைந்தது, பணப்பேயென்னும் ஒரு கொடும்பாவி. அப்பேயின் வசப்பட்டதும் அவனிதயம் மாறியது. "பிக்ஷைவாங்கியவன் க்ஷணத்தில் லக்ஷாதிகாரியாய்விட்டான்? லக்ஷப்பிரபு கோடீச்ரவனாக ஏன் ஆகக்கூடாது" என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். உடனே பணத்தைப் பெருக்கும் வழியேதென்று நினைத்தான். பலவற்றினும் வியாபாரமே சாலச்சிறந்ததெனப்பட்டது. பணப்பேயின்

பேருதவியால் வைதிக விர்த்தியை விட்டு வியாபாரத்தொழிலில் நழுவ நிச்சயம் செய்து கொண்டான். தத்க்ஷணமே, பிக்ஷை மூட்டையை, யவிழ்த்து அதிலிருந்த அக்ஷதையில் கொஞ்சம் எடுத்து, தோண்டியின் வாய்ப் புறத்தைத மூடி வீட்டுக்கெடுத்துச் சென்றான்.

வீடடைந்ததும் தானடைந்த விலையேறப் பெற்ற கற்களை விற்றுத் தனமாக்கிக்கொள்ள நிச்சயித்து, இருந்த மற்ற மாசற்ற பொஞ்சட் காசுகளைத், தன் மனதுக்கியைந்த செட்டி யொருவனிடம் விட்டுவிட்டு, வெளித்தேயம் போக நினைவுகொண்டான்.

தோண்டியிலிருந்த ரத்தினங்களையெல்லாம் வெளியே யெடுத்துவிட, பொற்காசுகளெல்லாம் அத்தோண்டியிற் பாதியை நிறைத்தன. பாக்கித் தோண்டியில் அரிசியை நிரப்பித் தன் நண்பனிடம், அதைக் கொண்டுபோய், அத் தோண்டியில் அரிசி யிருப்பதாகவும், தான் வெளியூர் போவதால், அதைக் காப்பாற்றி வைத்திருந்து தான் வந்ததும் கொடுத்துவிடு மாறு வேண்டிக்கொண்டனன். நண்பனும் அவ்வாறே செய்வதாக ஒப்புக்கொண்டனன்.

காசு விசாரம் நீங்கியதும், கல் விசாரம் பார்ப்பான் மனத்தைக் குடிகொண்டது. அவைகளையும் விற்றுப் பொன்னாக்க மனங்கொண்டு அவைகளை யெடுத்துக்கொண்டு மாளவதேசத்து மன்னவனுக்கு விற்கப் புறப்பட்டுச் சென்றான். அக்கற்களை விற்பனை செய்துவிட்டு ஊருக்குத் திரும்புங்கால் அவனைச் சில* பெருவழிப்போக்கர், வழிமறித்து, பணம்பறித்து உபநயனம் செய்தனுப்பினர். இருதரம் உபநயனம் செய்விக்கப்பெற்ற இருடி, பழைய பார்ப்பானாகி, வழிப்பிச்சையெடுத்து ஊர் நோக்கி வந்துகொண்டிருந்தான். மகேந்திரபுரம் நோக்கி வந்துகொண்டிருந்த பட்டனை நோக்கி வந்துகொண்டிருந்த தொண்டிச் சனியவனை விட்டகலவில்லை. அப்பொழுது பகவான்தாஸ், மாளவதேசத்து மன்னனுக்குக் கப்பங்கட்ட மறுத்துவிட்டான். மறுத்தவனை அமர்க்களத்தில் முறித்துப் பணம்பறித்து வர மனங்கொண்ட மாளவமன்னவன், பகவான் தாஸின்மேல் ஒரு பெரும்போர் தொடுத்தான்.

போராரம்பமானதும், கேசவபட்டனை மாளவதேசத்தார், பகையாளி யொற்றனென்று கைதுசெய்து, அவனுக்கு காராக்ருகப்ரவேசம் செய்வித்தனர். அவன் அவ்விடத்திலேயே சிலகாலம் இருக்க நேர்ந்துவிட்டது.

இவன் கதி இவ்வாறாக, மகேந்திரபுரத்தில் வர்த்தகனோ வேதியன் மர்மமறியானாய் இருந்து வந்தான். ஆயினும் அவ்வூரில் கொடிய பஞ்சமொன்று, போரினால் நேரிட்டது. அக்காலத்தில் அரிசி விலையேற வர்த்தகன் அந்தணன் அரிசியை இப்போது உபயோகப்படுத்திக் கொண்டால், பின்னால் பார்த்துக்கொள்வோமென நினைந்து, பார்ப்பான் மடாவைக் குப்புறக் கவிழ்த்தான். கவிழ்த்தவன் கண் குளிர எல்லாம் கனகக் காசுகளாய்க் கொட்டின. "இவ்வேதியன் நமக்கல்லவோ காது குத்த யத்தனித்தான். நாம் நாட்டுக்கோட்டைபனென்பதும், நம் செவி நீளம் இன்னதென்றும் அறியாதவனானனல்லவோ வேதியன். ஆயினும் யாம் அவன் பட்டனென்பதையும், அவனுக் கிவ்வண்ணம் நாமம் சாத்த வேண்டு மென்பதும் நன்கறிவோம்" என்று மனமகிழ்ந்து பொற்காசுகளையெல்லாம் தன் பொற்கொடியாள் வசமொப்புவித்துவிட்டுப் பார்ப்பான் தோண்டியில் தான் பின்பு வாங்கி வந்த அரிசியை நிரப்பிவைத்து விட்டான்.

மறுநாள் என்ன பாபமோ, செட்டியின் ஊழ்வினையே உருவெடுத்து வந்தாற்போல் கேசவபட்டன் அவன்முன் வந்து தோன்றினான். வந்தவனை யழைத்து, முகமன்கூறி, அவன் அரிசித்தோண்டியை அவனிட மொப்புவித்தான். "செட்டி அவன் வீடுசென்று தோண்டியைத் தோண்டிப்பார்க்கப் பொற்காசுகள் பறந்து போய், பருக்கைநிகர் அரிசியிருக்கக் கண்டான். கண்டதும் மனம் விண்டான். செட்டியினிடம் ஓடினன், ஓடித் தொகையை வேண்டினன். செட்டி மறுக்க வெகுண்டான். வெகு

* பெருவழிப் போக்கர்—High way men.

ண்ட முனிவனைச் செட்டி அலக்ஷியம்செய்து, அவன் அரிசித்தோண்டி வைத்துப்போக, அரிசி ஒன்றுக்கு முதவாது கட்டிதட்டுமேயன்றி நாணயங்களாகக் குட்டிபோடுமோ" என்று பரிகாசம் செய்தனன். ஏளனம் செய்யவே பட்டன் சினம் அளவுகடந்தது: உடனே சொல்பவன் உடல் நடுங்க, கேட்பவர் குலை நடுங்க பார்த்தவர் மனநடுங்கச், செட்டியைச் சபிக்கலானான். " அடே பாபி! ஹே பிராமணத்துரோகி! என் வயிறெரியுங்கால் நீ குளிர வாழ்வையா? வைத்துச்சென்ற பணத்தையில்லையென்று மறுக்கத் துணிவுகொண்ட நின் நரம்பற்ற நாக்கை நான் கண்டிக்க எந்நேரம் பிடிக்கும்? நீ நரகமென்னும் குழிக்கு, நாற்றங்காலாய்ப்போய் நீள்காலம் நலிக! நின் குடும்பம் நசிக்க! நின் சந்ததிகள் வேறற்றுப் போக!" என்று சரமாரியாய்ப் பொழியவாரம்பித்தனன்.

இவ்வளவு தூரம் தன்னை மானபங்கப்படுத்திச் சபித்த பட்டனைப் பொருளாய் அச்செட்டி அதிகாரிகளிடம் பிரியாது செய்துகொண்டான். அதிகாரிகளும், அந்தணன் வார்த்தைகள் பிசகென்று கருதி, நேற்றுக் கோவணத்திற்குத் துணி கேட்டவன் இன்று எவ்வாறு கோடீச்வரனானன். ஆதலால் இவன் பேசுவது சுத்தப் பொய்யென மதித்து அவனுக்குத் தண்டனை விதித்தார்கள்.

இவ்வாறு பட்டன் சிக்ஷிக்கப்பட்டானென்று தெரிந்ததும் அப்பட்டினத்தார் மிகுந்த விசனமடைந்து, பட்டனை அரசனுக்கு நேரே மனு செய்துகொள்ளுமாறு புத்தி கூறினர். பட்டனும் அவ்வாறே செய்துகொண்டனன்.

அன்றிரவு பகவான்தாஸ், மாறுவேடம் பூண்டு ஊர்சோதனை வந்துகொண்டிருந்தவன், சில சிறுபிள்ளைகளின் விளையாட்டை ஆச்சர்யமடைந்து பார்த்துக்கொண்டிருந்தான். அவர்களில் ஒருவன் நியாயாதிபதிபோல் பீடம் வகித்து உட்கார்ந்திருந்தான். சற்று நேரத்திற்கெல்லாம், அந்நியாயதிபதி முன்னர், கேசவ பட்டன்போல் நடித்தவனும், செட்டிபோல் நடித்தவனும் கொண்டுவரப்பட்டனர். நியாயாதிபதி இருவர் வாக்குமூலங்களையும் வாங்கிக்கொண்டு, தோண்டியைக்கொண்டு வருமாறு கட்டளை யிட்டான். தோண்டிவந்ததும் அதிலிருக்கும் அரிசியைப் பார்த்துவிட்டு செட்டியை நோக்கி "ஐயா! நீர் இந்தத் தோண்டியை எடுத்ததுண்டா இல்லையா" என்று வினவ, செட்டி சாமிசாக்ஷியாயில்லை யென மறுத்தான். உடனே அச்சிறு நியாயதிபதி மெச்சத்தக்க புத்திகூர்மையுடன் "ஐயா செட்டியாரே! இவ்வரிசி ஏது, சென்ற வருஷத்திய நெல்லினின்றும் குத்தியெடுத்தது போற் காண்கிறதே! நீரே அவ்வந்தணர் ஊர்விட்டுப்போய் ஏழு வருஷத்திற்கு மேலாகிறது என்கிறீரே! இவை யிரண்டில் எது நிஜம் எது பொய்? என்று கேட்க செட்டி " மதியிழந்து வாயிழந்து," தன் குற்றத்தை யொப்புக்கொண்டு பணத்தை மீட்டும் கொடுத்துவிடுவதாக ஒப்புக்கொண்டான்.

அது கேட்ட அரசன் அகமகிழ்ந்து, " இச்சிறுவன் புத்திசாதுர்யம் என்னே! நம் சட்ட்நிபுணரான நியாயதிபதிகளனைவரும் இப்பாலனுக் கீடாவரோ! தீவட்டிமுன் தீபம் நிற்குமோ? சூரியன்முன் மின்மினி சோதியாகுமோ?" என்று சிந்தித்தவாறே தன்னரண்மனை சார்ந்தனன்.

மறுநாட்காலை, மனுச்செய்துகொண்ட பட்டனையும், மற்றப் பிரதிவாதியையும் அழைத்துவரக் கட்டளையிட்டான். அவன் பின்னர் தான் முன்னிரவு கண்ட சிறுவனையும் அழைத்துவந்து, அவர்களிருவரையும் விசாரித்து, நியாயம் தீர்க்குமாறு வேண்டிக்கொண்டனன். சிறுவனும் தான் முன்னிரவு நடித்ததுபோல், தோண்டியைக் கொண்டுவரச்சொல்லி, அது புது அரிசியென்று ரூபித்து, செட்டியைக் குற்றவாளியாக்கினான். அது கண்ட நியாயாதிபதி அழுக்காறு கொண்டவனாய், செட்டி ஒருவேளை அரிசியை, உபயோகித்திருக்கலாமென்

றும், அத்தோண்டியில் பொன்நாணயங்கள் இருந்திருக்க "நியாயமில்லை யென்றும் வாதித்தான். இதைக் கேட்டதும் பகவான்தாஸ் ஏங்கலானான். சிறுவன் இவ்வினாவிற்கு யாது விடை பகர்வன்? என்று சிந்தித்துக்கொண்டிருந்தான். செட்டியின் முகமும் மலரவாரம்பித்தது. ஆயினும் சிறுவன் பாலசந்திர வதனம் வாடவேயில்லை.

உடனே அவன் செட்டியை நோக்கி, "ஐயா இப்பொழுது நீர் நான் சொல்லியபடி எழுதும் நீர் குற்றவாளி யென்பதும், உத்தமனென்பதும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும்" என்றார். செட்டியார் எழுத மனமற்றவராயிருந்தாலும் மன்னனருகிலிருக்கையில் மறுக்கமருண்டான். உடனே அச்சிறுவன் செப்பியவாறே வரையலுற்றான். அல்லிகிதம் பின்வருமாறு "அடியென் பொற்கொடியாளே! நாம் பொற்காசபகரித்ததெவ்வாறோ சிற்றரசர் செவியுற்றது. அவர் என்னுடை குற்றமறிந்து என்னைத் தூக்கிவிட உத்தரவளித்துவிட்டார். இப்பொழுதும் வேதியன் பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டால், உனக்கு மாங்கல்யப்பிச்சை யளிப்பதாக வாக்களித்தனர். என்னை யுனக்கு இனிப்பார்க்கவேண்டுமெனுமார்வமுளதேல், இது கொணரும் கொத்துவாலிடம், பொன் பூட்டிய பெட்டியைக் கொடுத்தனுப்புவாய். இங்ஙனம், பெட்டியை யெதிர்பார்த்து நிற்கும்,

............செட்டியார்.

இக்கடிதம் கண்ட கற்புடைய காரிகை செட்டியார் இல்வாழ்க்கைத்துணைவி. அவர் உலகவாழ்க்கையைக் கொஞ்சநாள் நிலைநிறுத்த எண்ணங்கொண்டு, பூட்டிய பெட்டியைச் சாவியுடன் நியாயஸ்தலத்துகனுப்பினள். பெட்டி சிறீவன் கைக்கெட்டியது, நியாயாதிபதி தலை 1 முழம் குறைந்தது, இறங்கிய முகமும், சுருங்கிய கண்ணுமாய், அதிகாரி வெளியே நடந்தான்.

இவைகளைக்கண்ட வேந்தன் அடங்கா மகிழ்ச்சிகொண்டு அச்சிறுவனை ஆலிங்கனம் செய்துகொண்டனன். அவனையே பிரதம நீதிபதியாய் நியமித்தான். பின்னர் செட்டியார் தம் பாவத்தின்பலனை யேற்று தன் சொத்து முழுதையும் இழந்து, ஊர்விட்டோடிப் போயினார். வேந்தனருளாலும், பாலன் பத்தியாலும், பணம்பெற்ற வேதியன் தன் ஆஸ்தியையெல்லாம், அந்தச் சிறுநீதிபதிக்கே யளித்தான். அவனுக்குச் செல்வத்தினிடத்து மிகுந்த வெறுப்புண்டாயது. "இது செல்வம், செல்வதே! ஓரிடம் நிலைபெற்றிருப்பதில்லை." "பொருளீட்டலும் துன்பம் ஈட்டியதைக் காத்தலும் துன்பம்; காத்தல் குறைபடிற்றுன்பம், கெடிற்றுன்பம், செலவிடிற்றுன்பம்;" இங்ஙனம் பலதுன்பங்கள் பயக்கும் பணத்தை நம்பொணாது மெய்தானுமே' "ஆறிடுமேடும் மடுவும் போலாம் செல்வம்!" ஆ! வாஸ்துவம் தான். நான் தனவந்தனானதும் தனமற்றவனாயினதுவும் போதுமே; இதற்காக என்ன ஓட்டம் ஓடினோம், என்னபாடு பட்டோம், என்னபொய் சொன்னோம். என்ன வருணாசிரமதர்மம் கைவிட்டோம், என்ன அடிபட்டோம், என்ன சிறைபட்டோம், என்ன கோபம் கொண்டோம் எவ்வாறு வாய்கூசாது சபித்தோம், ஐயே! இன்னும் என்ன பாவம் செய்தோம். எல்லாம் எதற்காக? இந்தப் பொன்னுக்காக அடாடா; சிவனேயென்று, பிக்ஷையை வாங்கி புஜித்து கிருஷ்ணா ராமா கோவிந்தா வென்று உட்கார்ந்திராமல், வியாபாரியாய், மோசஞ்செய்து, அடியுதை இவைகள் பட்டு, நியாயஸ்தலம் போக நேர்ந்ததல்லாவா? ஆ! இது என்ன துச்சம்! இதனால் யாருக்கு என்ன பிரயோஜனம். பணமா பாக்கியம், வித்தமுள்ளவன் தூங்கான் என்பது எவ்வளவுநிஜம். இவ்வாறு நம்மைப் பலவழியிலும், மோக்ஷ மார்க்கத்தைவிட்டு, பொட்டைக் குதிரைபோல், கல்லும், முள்ளும் நிறைந்தபாட்டையி லுழுத்துச்செல்லும் இப்பணத்தை யேன் மானிடரிவ்வாறு பூஜிக்கின்றனர். பணமுள்ளவன் எவ்வளவு பாபங்களைச் செய்கிறான். கள்ளும், பொய்யும், காமமும், கொலையும், பணத்திற்காகவே, பணத்தாலேயேயன்றி மற்றவைகளுக்காக விருப்பது மிகவுமரிது. பணமென்னும் அசுவம் ஆரோகணித்து, வாழ்வு என்னும் ஆற்றைத்தாண்ட விரும்பியவன், மண்குதிரையை நம்பி நீர் பெருகியோடும் நிஜவாற்றிலிறங்கிய, மடமானிட னொப்பனல்லனோ" என்று சிந்திக்க

லானுர். பின்னுல் அவைகளையெல்லாம் வெறுத்துச் சந்நியாசம் வாங்கிக்கொண்டு, சன்மார்க்கத்திற்சேர்ந்து, ஜீவன்முக்தரானுர்.

செட்டியார் ஊரைவிட்டோடிய செய்தி கேட்டதும், அவர்மனைவி தற்கொலை புரிந்து கொண்டாள். அவர், ஒருநாடு கடக்கையில் முன் பட்டனிடம் பணம் பறித்தவரிடம் அகப்பட்டுக்கொள்ள அவர்கள், "நாம்தாம் ஏதோ, இல்லாக்கொடுமை பார்ப்பானை உதைத்து ஏதோகொஞ்சம் பிடுங்கிக்கொண்டோம்; இந்தச்செட்டி நல்லகொழுத்த பணக்காரச் செட்டி, அவரிடம் பாவம்! ஏதோ கொஞ்சம் மிச்சமிருந்ததையும் பிடுங்கிக்கொள்ளப் பார்த்தான். இவனை லேசிலேவிடப்போகாது" என்று சொல்லி நையப்புடைத்தனுப்பினர். செட்டியார் அடிதாங்காமல், "ஐயோ பிராமணத் துரோகியானேனே! அவன் சாபம் பலித்து விட்டதே. "என்வீடு எருக்குமுளைத்து எலிகள் குடியிருக்கலாச்சே,' என்னுருயிர்த்துணைவி வருந்தி உயிர் விடலாச்சே, என் சொர்ணசரீரம், என்ன கஷ்டப்பட்டு வெகுநாளாய் வளர்க்கப்பட்ட தேகம் இவ்வாறு புடைபெறலாச்சே! என்கவலையற்ற சித்தம், வருத்தம் கனக்கிழியலாச்சே! எல்லாம் எதனுல்? பொன்னுக் காசைப் பட்டல்லவோ! அந்தோ பிராமண சாபம் கொடிதுகொடிது" என்றுவருந்தி உயிர் விட்டான்.

இவ்வாறு அறிவு கெட்டுப்போன இவ்விருவர் பட்டபாடும் கெட்டகேடும் என்னே! யோசிக்குங்கால் பயமாயிருக்கிறதே. ஆயினும் இவர்கள் எப்போது செல்வத்தை வெறுக்கலானுர். அதையடைய அவர்கள்செய்த முயற்சியில் வருத்தம் வந்தபோதல்லவோ அவர்கள் செல்வத்தை யிகழ்ந்தனர். மற்ற நாளில் அவர்கள் பணத்தாற் சுகம் பெறவில்லையோ என்பதும் நியாயமானதொரு கேள்வியே. ஆயினும் அவர் சிறிது சுகம் பெற்றவராயினும் பெருந்துன்பமிறுதியிலடைந்தனரல்லவோ? அதைக்கண்டு நாமும், அநியாயமாய்ப் பொருள்தேட விரும்புவதும், அநேகமாய். ஊரார்பணத்தை யபகரிப்பதும், சொல்லொணுத் துயரத்திற் கிடமாகும். "திரைகடலோடியும் திரவியம்தேடு" என்று ஔவை சொல்லினளேனும், ஒருகட்டுக் கரையோடே பொருள் சேகரிக்கவேண்டியது, நம் இகபர சாதகத்திற்கு இன்றியமையாததாகும்.

## EXTRACT : HEALTH NOTES.

### சுகாதாரக் குறிப்பு.

சுகாதார விதிச் சுருக்கம்விரும்பு
சுத்தக்காற்றைச் சுவாசித்திருநீ
ஜீவஜெந்து நெருக்கமேவுவதைவிடு
நிலைவிளக்கறைபி னித்திரைகொள்ளாதே
அழுகினவஸ்துவை யாசித்தலாகா
தோப்பிலிரவிற் றாங்கலாகாது
துர்க்கந்தத்தைச் சுவாசித்தலாகாது
காற்றுள்ளவிடத்தில் வீற்றிரெப்போதும்
சுகமேபகலிற் றேப்பிலிருப்பது
மழைபெய்யக் காற்று மாசினைப்போக்கும்
வீட்டிற்குப்பை விழச்செய்யாதே
வீட்டருகு குப்பை மேவலுந்தீதே
ஆடுமாடுகள்வீட் டருகில்வையாதே
வீட்டில் மலஞ்சலம் விடுத்தலாகா
விடுத்தாலுடனே வெளியாக்கவேண்டும்
சாலகங்கால்வாய் சாலவுஞ் சுத்திசெய்
துர்க்கந்தவினைகளைத் தூரத்தினில்வை
தேகம் வஸ்திரம் கிரகந் தினமுஞ் சுத்திசெய்
கரித்தூள் துர்க்கந்தம் காணுதோட்டிடும்
கழிமண்டுகளாற் கடுநாற்றம்போம்
வீட்டிற் கடிக்கடி வெள்ளையடித்துவா
உப்பைப்புகைக்க வோடும்விஷவாயு
அயோடினைக்கண்டா லகலும்வசூரி
செம்புந்திராவகமுஞ்சேர்க்கவேநாற்றம்போம்
கந்தகப்புகையாற் காணுதுவிஷவாயு
சுகாதாரம் விட்டாற் சுகமென்பதில்லை
சுகாதாரம் விரும்பிச் சுகமாக வாழ்க
சுத்தஜலபானஞ் சுத்தத்திற் காதாரம்
கண்ணாடிபோலக் காண்பது சுத்தநீர்
இரசனைவாசனை யிற்றது சுத்தநீர்
வண்டற்படியா மாண்பது சுத்தநீர்
பருப்புக்காய் வேகும் பக்குவஞ் சுத்தநீர்
அசுத்த ஜலபானத்தா லகட்டிற் பூச்சியாம்.
அசுத்த ஜலபானத்தா லநேக சுரங்களாம்
அசுத்த ஜலபானத்தா லநேக பேதியாம்
அசுத்த ஜலபானத்தாலண்டிடும் வாந்தி
சுண்ணத்தரை நீராற்சூழ்குடலைப் மந்தமாம்
சுண்ணத்தரை நீராற் சுகக்கேடும் பேதியாம்
அழுக்கு ஜலபானத்தா லற்புதச் சிலந்தியாம்
அழுக்குஜல முழுக்கா லணுகிடுஞ் சிலந்தி
அழுக்குஜலத்தா லநேக வியாதிகள்
சுத்தமழைநீரே உத்தமஞ் சுகத்திற்கு
அசுத்தமழைநீரா லளவிலாக்கேடு

சுத்தநதிநீரால் முத்தோஷந் தாகம்போம்
கெட்டநதிநீரால் வெட்டைசுரம் பேதியாம்
அசுத்தக்குளத்து நீராகா சுகத்திற்கு
சுத்தமிலா வேரிநீர் நத்தினால் வாதம்
சுத்தக்கிணற்றுநீர் சுகமாகும் நாளும்
ஆற்றாற்றுநீருக் கடற்தாகம் பித்தம்போம்
பாறையது நீராற் பலபல தோஷமாம்
சுக்கான்பாறைநீர் மூக்கு மூத்திரங்கபம்
கரும்பாறைநீராற் பெரும்பயன் சுகத்திற்கு
அருவிநீரா லழதுபெருந் தேகம்
வடிகட்டநீரின் வளர்குற்ற நீங்கும்
காய்ச்சினால்நீரின் கடுந்தோஷம் நீங்கும்
ஸ்நானஞ்செய்வதே சகலசௌக்கியம்
தினஸ்நானத்தால் மனோபலவிருத்தியாம்
தின்ஸ்நானத்தாற் றேகசுகவிருத்தி
தினஸ்நானத்தாற் றீருஞ்சொறிநோய்
தினஸ்நானத்தாற் றேகம் பெருக்கும்
ஸ்நானவிதியறியார் சுகவிதியறியார்
ஸ்நானஞ் செய்யார் சுகவீனராவார்
சுத்தஜல ஸ்நான மெத்தவிசேஷம்
உதயஸ்நான முடம்பிற்குறுதி
போஜன ஸ்நானம் பொல்லாது நீக்கு
ஜீரணஸ்நானஞ் செய்தலைநீக்கு
குளிர்ந்த ஸ்நானங் கூடாது களைப்பில்
குளிர்ந்த ஸ்நானங் கொடுக்குமுற்சாகம்
குளிர்ந்த ஸ்நானத்தாற் றெளிந்தோடுமிரத்தம்
குளிர்ந்த ஸ்நானத்தாற் குதூகலிப்புண்டாம்
குளிர்ந்த ஸ்நானத்தாற் கூடும்பலஞ்சுகம்
குளிர்ந்த ஸ்நானந் தெளிந்தறிந்தாடு
இளவெந்நீர் ஸ்நான மிதமாங் குளிரில்
இளவெந்நீர் ஸ்நான மினிதெய்த்தோர்க்கு
இளவெந்நீர் ஸ்நானமிசையுங்களைத்தோர்க்கு.

—சுகாதாரபோதினி.



## EVENTS OF THE MONTH.

## மாத விசேஷங்கள்.

### "லோகல் அண்டு முனிசிபல் கான்பரென்ஸ்."

சென்ற மார்ச்சுமீ 17-18-ந்தேதிகளில் சென்னையில் விக்டோரியா பப்ளிக் ஹாலில் (Victoria Public Hall) ஸ்தானிகசுய ஆட்சிசங்கங்களில் ஜனப்பிரதிநிதிகளாயுள்ளவர்களின் முதல் கூட்டம் (Conference) கூடிற்று. இம்மாகாணத்தில் பற்பல பாகங்களில் யூனியன்கள், முனிஸிபாலிட்டிகள் (நகரச்சங்கங்கள்) தாலூகா போர்டுகள், ஜில்லா போர்டுகள் எனப் பெயருள்ள பல சங்கங்கள், ஜனப்பிரதிநிதிகளின் ஆதரவுடன் ஆங்காங்குள்ள ஸ்தல காரியங்களை நிர்வகித்து வருவதற்காக ஏற்பட்டிருக்கின்றன. இச்சங்கங்கள் ஜனநாயகமுள்ளதாய், இன்னும் உபயோகமாயிருப்பதற்கான சீர்திருத்தங்களை, தீர்க்காலோசனை செய்து, நேராக கவர்ன்மெண்டிற்கு அறிக்கை செய்வது இக்கான்பரென்ஸின் கருத்துக்களில் ஒன்று. இதனுடைய நடவடிக்கைகள் கனம் லார்ட் பென்ட்லண்ட் அவர்களால், ஆதரவுடன் ஆரம்பிக்கப்பட்டது. பிறகு ஆலோசனை செய்யவேண்டிய விஷயங்களை ஐந்து வகுப்பாகப்பிரித்து, பல அக்கிராசனாதிபதிகளின்கீழ் ஒவ்வொன்றும் நன்றாக நடந்தேறியது.

### மாகாண சுய ஆட்சி.

அந்தந்த மாகாணங்களின் துரைத்தன காரியங்களும் விசாரணைகளும் அந்தந்த மாகாணத்தார்வசமாக விடப்படு அவ்விடத்தைச் சேர்ந்த பொது ஜனங்களின் அதிகாரப் பொறுப்பின்கீழ் அமைந்த அதிகாரிகளின் ஆதரணையில் நடத்திவந்தால், இந்தியாவானது யுத்தத்தில் இன்னும் பன்மடங்கு உதவிசெய்யக் கூடியதாயிருந்திருக்கும் என்று முன் இந்தியாவில் முக்கிய சேனாதிபதியாக இருந்த 'ஜெனரல் ஸர் ஓ. மூர் கிரேஹ்' என்பவர்,

எழுதியிருப்பதை இச்சஞ்சிகையின் முகட்டில் பிரசுரித்திருக்கிறோம். இந்த ஸ்தானிக சுய ஆட்சி சுதந்திரம் கொடுக்க 1911-ம் வருஷமே கவர்ன்மெண்டார் ஒப்பியிருந்தார்களென்றும் தெரிகிறது. இவ்விஷயம் மிக முக்கியமானதால் அடுத்த சஞ்சிகையில் விவகரித்து எழுதுவோம்.

"இந்தியா யுத்த கடன்."

இந்தியா கவர்ன்மெண்டார் இந்தியர்கள் ஒவ்வொருவரும், தங்களாலியன்றமட்டும், இந்த யுத்தத்தை தீவிரமாய் முடிப்பதில் பிரிட்டிஷ் ராஜாங்கத்தாருக்கு உதவி செய்யும் பொருட்டு இந்தியா யுத்தக்கடன் ஒன்று ஏராளமாகச் சேர்க்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஏழை ஜனங்களும் இதில் கூடியமட்டும் உதவி செய்யட்டும் என்று, பல அனுகூலமான விதிகள் ஏற்படுத்தியிருப்பதுடன், கடன் தொகைக்கு மிக தாராளமான வட்டியும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். சென்னை நகரவாசிகள், மார்ச்சு மாதம் 23-ந்தேதி ஷெரிப்பால் கூட்டப்பட்ட பொதுக்கூட்டத்தில், இந்தியா யுத்தக் கடனுக்கு தங்கள் சக்தியாலானது அவ்வளவையும் கொடுத்துதவுவதாகத் தீர்மானம் செய்தார்கள். அப்பொழுது கனம் லார்ட் பெண்ட்லண்ட் அவர்கள் அக்கிராசனம் வகித்தார். ஜனங்கள் யுத்தக் கடனின் விதிகளை அறிந்துக்கொள்ளும்பொருட்டு அவைகளை விவரமாய் மற்றோரிடத்தில் பிரசுரித்திருக்கிறோம்.

"THE INDENTURE SYSTEM"

'பிஜி' முதலிய தீவுகளுக்கு உடன்படிக்கையின்மேல் போகும் இந்தியர்கள் படும் கஷ்டங்களும் இந்திய ஸ்திரீகளுக்கு ஏற்படும் அவமானங்களும் சகிக்கமுடியாதவை என்றும், கனம்பொருந்திய இந்தியா கவர்ன்மெண்டார், கனம் லார்ட் ஹார்டிஞ்ச் அவர்கள் ராஜப்ரதிநிதி ஸ்தானத்திலிருந்து கொடுத்த வாக்குறுதிப்படி, உடன்படிக்கைமேல் கூலியாட்களைச் சேர்க்கும் வழக்கத்தை நிறுத்தவேண்டும் என்றும், இந்தியர்கள் ஒரே மனதாய் கேட்டுக்கொண்ட விஷயம் எல்லாருக்கும் தெரிந்ததே. தங்கள் சகோதரிகளுக்கேற்படும் அவமானங்கள் சகிக்கமுடியவில்லை என்று பம்பாயில் இந்திய ஸ்திரீகளெல்லாம் கூட்டம் கூடி; தீர்மானித்து, அதை நேரில் கனம் லார்ட் செம்ஸ்போர்ட்டுக்குத் தெரிவிப்பதாய் தீர்மானித்தார்கள். அப்படியே இதர மாகாணங்களிலுள்ள இந்திய ஸ்திரீகளும் தீர்மானித்து, லேடி மேட்டா முதலிய பிரமுகர்களின்கீழ், இந்திய ஸ்திரீகள் நேரில் கனம் செம்ஸ்போர்ட் பிரபுவிற்குத் தங்கள் குறைகளை தெரிவித்துக் கொண்டார்கள். கனம் செம்ஸ்போர்ட் பிரபுவும் உடன்படிக்கை வழக்கம், யுத்தத்தின் பொருட்டு ஏற்பட்ட விதிகளின்படி நிறுத்தப்பட்டிருப்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம் என்றும், ஒருதரம் நிறுத்தப்பட்ட அந்த வழக்கமானது மறுபடியும் உயிர் பெறாது என்று தான் நம்புவதாயும், மிகக் கருணையுடன் கூறினர். பிறகு செம்ஸ்போர்ட் பெருமாட்டி இந்திய ஸ்திரீ பிரமுகர்களை வரவேற்று 'டீ பார்ட்டி கொடுத்து' உபசரித்தார். பொது ஜன காரியங்களில், இந்திய ஸ்திரீகளும் முன் வந்து, தங்களது அபிப்பிராயத்தை வெளியிட்டு அக்குறையை நேரில் அதிகாரியினிடம் முறையிட ஆரம்பித்தது இந்தியாவின் நற்காலவருகைக்கு ஒரு அறிகுறியென்று நினைக்கிறோம்.

கும்பகோணம் காலேஜ் ஜூபிலி.

சமீபத்தில் கும்பகோணம் கவர்ன்மெண்ட் காலேஜின் 50-வது வருஷத்திய "ஜூபிலி"க் கொண்டாட்டம் திவான் பஹதூர் வி. பி. மாதவ ராவ் அவர்களின் அக்கிராசனத்தின்கீழ் நடந்தேறியது. அக்கிராசனாதிபதி அவர்கள் தான் கலாசாலையில் படித்த காலத்தில், பிரின்ஸிபாலாயிருந்த போர்ட்டர் துரை அவர்களின் குணநிசயங்களை விவகரித்துக்கூறி, உபாத்தியாயர்களும், போதகர்களும், தங்களுடைய மாணாக்கர்களிடத்தில் அனுதாபமும் அபிமானமுமுள்ளவர்களாயிருப்பதோடு அவர்களுடன், சமமாகப் பழகி, பாடத்தைப் போதிக்கும் ஆசிரியராயிருப்பதோடு இராமல், மெய் நண்பராகவும், புத்திமதிச் சொல்லி வழிகாட்டுபவராகவும் (Teacher Friend and Mentor) இருக்க வேண்டும் என்றும் சொன்னர். இக்குணங்களே இக்காலங்களில் மிகவும் வேண்டியவையாய் இருப்பன. பெற்ற பிதாவிற்கு அடுத்தபடியில் பையனுடைய நன்னடக்கைக்கும் அபிவிருத்திக்குமான பொறுப்பு வித்யா குருவாகிய ஆசிரியரது என்பது கவனத்திலிருக்க வேண்டும்.

### துணிகளின்மீது இறக்குமதி வரி.

இவ்வருஷத்திய புதுவரிகளில் இங்கிலாந்திலிருந்துவரும் துணிகள் முதலிய பருத்தியைச் சேர்ந்த சாமான்களுக்கு இந்தியா கவர்ன்மெண்டார், நூற்றுக்கு 3½ விகிதத்திலிருந்து வரியை 7½ விகிதத்திற்கு உயர்த்தியிருப்பது எல்லாருமறிந்த விஷயமே. இவ்வரியினால் இங்கிலாந்து வியாபாரிகளுக்கு லாபம் மிகவும் குறைந்து மிகநஷ்டமும் ஏற்படும்என்று முறையிட்டாலும், இந்தியாவில் உற்பத்தியாகும் பருத்திச்சாமான்களுக்கும் துணிகளுக்கும் ஜாஸ்தியாக விற்பனை ஏற்பட்டு, இந்தியாவில் அக்கைத்தொழில் விருத்தியடையும். இந்திய கவர்ன்மெண்டார் தங்கள் தேசத்துக் கைத்தொழில்களை விருத்திக்கு கொண்டுவரச்செய்யும் முயற்சி மிகவும் கட்டாயமாய்ச் செய்யவேண்டியதென்பதை எல்லாரும் ஒப்புக்கொள்ளுவார்கள். இங்கிலாந்திலுள்ள லங்காஷையர் முதலிய பிரதேசங்களில் இவ்வியாபாரம் மிகவும் மும்முரமாக நடந்தேறுகின்றன. அவ்விடத்துமுக்கிய வியாபாரிகள் இந்திய மந்திரியாகிய மிஸ்டர் சேம்பர்லெயினிடம் தங்களுக்கு ஏற்படும் நஷ்டத்தைப்பற்றி முறையிட்டு, அவ்வரியை உடனே எடுத்துவிடாவிட்டால், தங்களுக்கு இந்த யுத்தத்தில் உள்ள ஊக்கம் ஒருவேளை குறையக்கூடும் என்றும் சொன்னார்கள். ஆனால் இந்தியா மந்திரியானவர், மிகவும் சரியாய் தம்மால் அவர்கள் சொல்லுவதற்கிணங்க முடியாது என்று கண்டிப்பாய் சொல்லியும் லங்காஷையர் வியாபாரிகள் பண்ணிய ஆர்ப்பாடத்தில், காமன்ஸ் சபையில் இவ்விஷயமானது மறுபடியும் ஆலோசிக்கப்படும் என்று அவர்களுக்கு கொஞ்சம் இடம்கொடுத்திருக்கிறார்கள். இதை மாஜி பிரதம மந்திரியாகிய மிஸ்டர் ஆஸ்குவித்து பிரேரேபித்தார் என்பது இந்தியர்களுக்கு சிறிது ஆச்சரியமாயிருக்கிறதுடன் இந்தியர்கள் போட்டிபோட்டுக்கொண்டு எள்ளளவும் பேதமில்லாமல் இந்த யுத்தத்தில் ஊக்கத்துடனிருக்கும்பொழுது, லங்காஷையர் ஜனங்கள் மாத்திரம் பேதம் பாராட்டி, சுயநலத்தின்பொருட்டு, வாதம் செய்வது இந்தியர்களுக்கு மிகவும் விசனத்தையும், ஜாக்கிரதையையும் உண்டாக்கி இருக்கிறது.

### அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களின் யுத்த ஸந்நத்தம்.

பல காலமாய், ஜர்மனிக்கும் அமெரிக்காவிற்கும் புகைந்துகொண்டு வந்த மனஸ்தாபமானது முற்றி, இம்மாத ஆரம்பத்தில் இவ்விருதேசங்களுக்கும் யுத்த நிலைமை ஏற்பட்டுவிட்டது. அமெரிக்காவின் காங்கிரெஸ் சபையில் இருபிரிவுகளாகிய பிரதிநிதி சபை செனேட் சபை என்ற இருவகைகளும் யுத்தத்தில் இறங்குவதென்று தீர்மானித்தபின் ஜெர்மனியுடன் யுத்தமென்று பிரஸிடெண்ட் வில்ஸன் அறிக்கை செய்துவிட்டார். இதன் முக்கிய நிமித்தமாய், உடனே 5-லட்சம் துருப்புகள் சேர்க்கப்படுவார்கள். அப்பால் அவசியமானால் இன்னும் 5-லட்சம் பேர்கள் சேனையில் சேர்க்கப்படுவார்கள். இன்னும் பல யுத்த முஸ்தீபுகள் அமெரிக்காவில் நடந்தேறி வருகின்றன. அமெரிக்கரைப் பாராட்டி நமது சக்கிரவர்த்தியும், இதர நேச அரசர்களும் பிரஸிடெண்ட் வில்ஸனுக்கு உபசாரமொழிகள் அனுப்பியிருக்கிறார்கள்.

## MOTHERLAND.

## தமிழகம்.

வாழிய அன்னாய்! வாழிய அன்னாய்!
தொழுதுனை வழுத்தினம் தூயநீர் அன்னாய்!
மிடியிருள் நீங்கி விடியல்வந் துற்றது.
என்னினித் துயில்வது? எழுந்துமுன் பாராய்!
நின்புகழ்க் கதிரவன் நேரவந் துற்றனன்.
அன்புருக் கொண்ட அன்னாய் எழுக!
எம்மனங் குடிகொளும் இறைவியே எழுக!
எம்வாய் புகழ்தர இனியைநீ எழுக!
எங்கரங் குவிதர எற்பாய் எழுக!
நின்னுடைச் சீரெலாம் நேரிதில் யாங்கள்
பிள்ளை முறையினிற் பெறுதலும் இலமோ?
பண்டுநின் சிறப்பெலாம் பரிக்கும் அடியேம்
மறந்தனைத் துறப்பமோ? மயங்கலை அன்னாய்!
வான்மீன் திரியினும், வானம் பொய்ப்பினும்,
நின்னருந் தொண்டினை நீங்கலம் அம்ம!
களைக! களைக! கடுந்துயிற் பிணியினை!
எழுக! எழுக! ஏறுக ஆதனம்!
கவிக! கவிக! காமர்வெண் குடைநிழல்!
ஓங்குக தமிழ்மணம்! உயர்கநின் குடிகளே!

—செந்தமிழ்.